POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO. G. 6. TN. MS. C. P. P. 56

ANNA Leading Progressive Tamil Daily of the People

# புரட்சித்தலைவர் 30 நிமிட

Regd. No. TN - MS [C] 244 Phone: 420212 பக்கம்4விலை 60 காசு

அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 10] சென்னை 21-6-1986 சனி : வெளியூர் 22-6-1986 ஞாயிறு [இதழ் 238

# பேருரை

## மதுரையில் நடைபெறும் மாநில மன்ற மாநாட்டில்

மதுரை, ஜூன். 21- மதுரையில் நடைபெறும் எம்.ஜி.ஆர். மன்ற மாநில மாநாட்டில் முதல்வர் புரட்சித் தலைவர் அரை மணி நேரம் பேருரையாற்றுகிறார் கழக அரசின் சாதனைகள்பற்றியும், எதிர்காலத்தில் கழகம் எப்படி செயல்படும் என்பது பற்றியும் அவர் விளக்கிகூறுவார்.

மதுரையில் ஜூலை 12' 13ல் நடைபெற இருக்கும் எம்.ஜி.ஆர். மன்ற மாநில மாநாடு சம்பந்தமாக ஆலோசிக்க மதுரை ரீகல் திரையரங்கில் மதுரை நகர் மாவட்ட எம். ஜி. ஆர். மன்ற நிர்வாகிகள் கூட்டம் நடந்தது.

மன்றத் தோழர்கள் அனைவரும் திரளாகவந்து கலந்து கொண்டனர்.

கூட்டத்துக்குப் பின் அனைத்துலக எம்.ஜி.ஆர். மன்றதலைவர் முசிறிப்புத்தன் பேட்டி அளித்தார். அவர் கூறியதாவது:—

### சிறப்பு அம்சம்

மதுரை மாநகரில் எம்.ஜி.ஆர். மன்ற மாநாடு சிறப்பாக நடைபெற இருக்கிறது.

இந்த மாநாட்டில் முதல்வர் புரட்சித்தலைவர் 30 நிமிடம் சிறப்புரை யாற்றுவார்.

கழக ஆட்சியின் சாதனைகள் பற்றியும், இனிமேல் மக்களுக்கு என்னென்ன செய்யப் போகிறோம் என்பதுபற்றியும், பல்வேறு திட்டங்கள் பற்றியும்முதல்வர் புரட்சித தலைவர் பேசுவார்.

### எதிர்கால திட்டம்

எதிர் காலத்தில் கழகம் எப்படி அமையப் போகிறது என்பது பற்றியும் புரட்சித்தலைவர்உரை யாற்றுவார்.

இவ்வாறுமுசிறிப்புத்தன் கூறினார்,

பேட்டியின் போது மதுரை பால்வள தலைவர் நவநீதகிருஷ்ணன் முன்னாள் மேயர் பால கிருஷ்ணன் மாணவர் பிரிவு ராகவன், ரத்தினவேல் முருகேசன் ஆகியோர் உடன இருந்தனர்.

இன்று நடை பெற்ற ஆலோசனைக் கூட்டத்தில் 3 ஆயிரத்துக்கு மேற்பட்ட தோழர்கள் கலந்துகொண்டனர்.



## பொற்கோவிலில் பதட்ட நிலை: இரு கோஷ்டி மோதல்

அமிர்தசரஸ். ஜூன்21- சீக்கியர்களின் பொற் கோவிலுக்குள் இருகோஷ்டிகள் மோதிக் கொண்டன. இதனால் அங்கு பதட்ட நிலை உருவானது

அமிர்தசரசில் உள்ள சீக்கியர்களின் பொற்கோவிலுக்குள் சீக்கிய பிரபந்தக் கமிட்டி காவல் படையினர் உள்ளனர். அந்தஅமைப்புக்குபோட்டி அமைப்பான அகில இந்திய சீக்கிய மாணவர் சம்மேளன (பஞ்சித் கோஷ்டி) காவல்படையும் உள்ளே நுழைந்தது.

இருகோஷ்டிகாவல்படையினருக்கும் கைகலப்புஉண்டாகும் நிலை ஏற்பட்டது மாணவர் அமைப்புப் படையை பிரபந்தகமிட்டி காவல் படையினர் வெளியே தள்ள முற்பட்டனர்.

பிரபந்தக் கமிட்டி படையினர் துப்பாக்கிவைத்துருப்பதை மாணவர்படை கண்டித்தது. இதை தொடர்ந்து பயங்கர ரத்தக்களறி ஏற்படும் நிலை உண்டானது. பிரபந்தக்கமிட்டி தலைவர்கள் வந்து நிலைமையை கட்டுப்படுத்தினர்.

### ரூ 53 லட்சம் மதிப்புள்ள கடத்தல் தங்கம் பறி முதல்

பம்பாய், ஜூன். 21— ஐம்பத்து மூன்றுலட்ச ரூபாய் மதிப்புள்ள 220 தங்ககட்டிகளை வட மேற்கு பம்பாய் பகுதியில் பம்பாய் சுங்க இலாகா வினர் பிடித்துள்ளனர்.

### தென்மேற்கு பருவ மழை தீவிரம்

புதுடெல்லி, ஜூன் 21— தென்மேற்கு பருவமழை தீவிரமடையத் துவங்கியுள்ளது. இதனால் இந்தியாவின்பலபகுதிகளிலும் பரவலாக நல்ல மழை பெய்துவருகிறது.

கேரளாவில்கடந்த4ந்தேதி இந்த மழை துவங்கியது. சற்று தாமதமாக துவங்கியது என்றாலும் நல்லமழை பெய்திருப்பதாக மத்திய வானிலை ஆராய்ச்சி நிலை இயக்குனர் ஜி, ஆர். குப்தா தெரிவித்துள்ளார்.

தென்மேற்கு பருவமழையால் இந்தியாவின் பல பகுதிகளில் நல்ல மழை பெய்திருப்பதாகவும்குப்தா கூறினார். கடந்த ஆண்டைவிட இந்த ஆண்டு தென் மேற்கு பருவமழை தீவிர மடைந்திருப்பதாகவும் பல இடங்களில் நல்ல மழை பெய்திருப்பதாகவும்குப்தா கூறினார்.

ஒரிசா கடற்கரை வடக்குபகுதியில் குறைந்த காற்றழுத்த மண்டலம் உருவாகி உள்ளது. இந்தப் பகுதிகளில் கனத்த மழை பெய்யக் கூடுமென்று எதிர் பார்க்கப்படுகிறது.

கேரளாவின் இடுக்கி மாவட்டத்தில் நீர்த் தேக்கங்களின் நீர் பிடிப்பு பகுதிகளில் நல்ல மழை பெய்து வருகிறது. இடுக்கியில் 48மி.மீட்டர் மழையும், முன்னாறில் 50மி.மீட்டர் மழையும் நேற்று பெய்துள்ளது.

பொதுவாகஇந்தஆண்டு தென்மேற்கு பருவமழை நன்றாக உள்ளது. தமிழகத்தில் குற்றாலத்தில்சீசன் துவங்கியுள்ளது. தென் தமிழ்நாட்டின சில பகுதிகளில் மழை பெய்து வருகிறது.

பம்பாயில் நேற்று முன் தினம் பலத்த மழை பெய்தது. பல இடங்களில் போக்குவரத்து பாதிக்கப் பட்டது பல இடங்களில் வீடுகள் இடிந்து சேதமடைந்ததோடு நிலச் சரிவும் ஏற்பட்டது.

கடல் கொந்தளிப்பு காரணமாக கடலில் 6 மீட்டர் உயரத்திற்கு அலை எழும்பியது

குஜராத்தில் பல இடங்களில் கடந்தமூன்று நாட்களாக கனத்த மழை பெய்து வருகிறது. ஏரிகள், அணைகள் நிரம்பி வருகின்றன.

கைராம்மாவட்டத்தில் மழை காரணமாக வீடுகள் பல இடிந்துள்ளன. இதில் பலர் இறந்துள்ளனர்.

காவிரிநீர் பிடிப்பு பகுதியான தலைக்காவிரி மற்றும் சில இடங்களில் நல்ல மழை பெய்துள்ளது. காவிரிநீர் பிடிப்பு பகுதிகளில்நல்லமழை பெய்துள்ளதால் அணைக்கு நீர் வரத்து அதிகரித்துள்ளது.

நீலகிரி மாவட்டத்தில் உள்ள பல்வேறுநீர்த்தேக்க பகுதிகளில் பெய்த மழை காரணமாக பல்வேறு அணைக்கட்டுபகுதிகளுக்கு கணிசமான நீர்வரத்து வந்துள்ளதாக மின்வாரிய தலைவர் விஜய ராகவன் தெரிவித்துள்ளார்.

தமிழ் நாட்டிலுள்ள நீர்மின்சார நிலையங்களுக்கு நீர் வழங்கும் நீர் பிடிப்புப் பகுதிகளில் தென் மேற்கு பருவ மழை தொடங்கியதன் விளைவாக கணிசமான மழை பெய்துள்ளது






### ராஜ்யசபை தேர்தல்

சென்னை, ஜூன் 21— தமிழக சட்டமன்றத்திலிருந்து ராஜ்யசபைக்கு ஆறு உறுப்பினர்கள் தேர்ந் தெடுக்கப்பட வேண்டும். கழக வேட்பாளர்கள் நால்வர் உட்பட மொத்தம்8பேர் வேட்புமனு தாக்கல்செய்து இருக்கிறார்கள்.

வேட்பு மனுக்களை வாபஸ் வாங்க விரும்புகிறவர்கள் இன்று (சனி) மாலை 3மணிக்குள்வாபஸ் வாங்கிக்கொள்ளலாம்,

பிற்பகல் 2.45மணிவரை எவரும் வாபஸ் வாங்க வில்லை.

### தங்கம் கடத்திய நபருக்கு 2 ஆண்டு சிறை

சென்னை. ஜூன் 21— அகமதாபாத்தைச் சேர்ந்த மணிக்கலால்ஜெயின்(வயது 45). இவர் 8லட்ச ரூபாய் மதிப்புள்ள தங்கத்தைவிமானத்தில் கடத்தி வந்த போது சுங்கஇலாகா அதிகாரிகளால் பிடிக்கப்பட்டார்.

அவரைபோலீசார் தேடி பிடித்து காஃபிபோசா சட்டப்படி 2 ஆண்டு சிறையில் அடைத்தனர்.

## கழக விழா: புரட்சித்தலைவருக்கு செங்கை வழங்கும் வெள்ளி மான்

செங்கற்பட்டு,ஜூன்21- கழக அரசின்10ம் ஆண்டு துவக்கவிழாவையொட்டி முதல்வர் புரட்சித் தலைவருக்கு செங்கை மாவட்டக்கழகம்வெள்ளியால் ஆனதங்க முலாம் பூசப்பட்ட மான் வழங்குகிறது என்று மாவட்ட செயலாளர் ஆர். எஸ். முனிரத்தினம் எம்.எல்.ஏ தெரிவித்துள்ளார்.

அண்ணாவின் அரசு அமைந்த 10ம் ஆண்டு துவக்க விழாவும் முதல்வர் புரட்சித்தலைவரின் 10-ம் ஆண்டு சாதனைகள் தொடக்க திருவிழாவையும் ஒட்டி செங்கை மாவட்ட கழகத்தின் சார்பில் வரும் 29-ந் தேதியன்று முதல்வர் புரட்சித்தலைவருக்கு வெள்ளியால் ஆன மான் அளிக்க வேண்டும என்று மாவட்டக் கழக ஆலோசனைக் கூட்டத்தில் முடிவு செய்யப் பட்டது என்று முனிரத்தினம் தெரிவித்தார்,

திருவள்ளூரில் மாவட்ட கழக ஆலோசனை கூட்டம் மாவட்ட கழக அவைத் தலைவர் பாக்கூர் சுப்பிரமணியம்தலைமையில் நடைபெற்றது.

இக்கூட்டத்தில் அமைச்சர் ஆனூர் ஜெகதீசன், ஜே. சி டி. பிரபாகரன், ஜெகதரட்சகன் எம்.பி., காஞ்சி பன்னீர்செல்வம் வாரியத் தலைவர்கள் எஸ், டி.உக்கம்சந்த். கொளத் தூர் கோதண்டம், தி.க. நடராசன் மற்றும் சட்ட மன்ற உறுப்பினர்கள் பாலாஜி பட்டாபி ராமன் சண்முகம். எல்லாராசமாணிக்கம். எத்திராசன், நரசிம்மபல்லவன், தமிழ்மணி ஆகியோரும் ஒன்றிய,நகர கழக மன்ற செயலாளர்களும் கலந்துகொண்டனர்.

விழாவை 29 30 ஆகிய இருநாட்கள் சிறப்பாக கொண்டாட கூட்டத்தில் முடிவுஎடுக்கப்பட்டது என் றும்முனிரத்தினம்தெரிவித்துள்ளார்.



பழங்குடியினர் மேம்பாட்டுத் திட்டப்பணிகள் குறிதது முதல்வர் புரட்சித்தலைவர் பல்வேறு துறை தலைவர்களோடு ஆய்வு நடத்தியபோது எடுததபடம்.



**கடமை**

எந்தவித பிரதிபலனையும் எதிர்பாராது தன் கடமையை சரிவரச் செய்பவனே உயர்ந்தவனாவான்.

—பேரறிஞர் அண்ணா

**பழக்கம்**

எந்தவொரு பழக்கமும் நமக்கு அடிமையாகஇருக்கவேண்டுமே தவிர, நாம் அதற்கு அடிமையாகி விடக் கூடாது.

—தந்தை பெரியார்

# அருப்புக்கோட்டை தொகுதி வளர்ச்சி: புரட்சிதலைவர் ஆர்வம்

விருதுநகர், ஜூன் 21— அருப்புக்கோட்டைத் தொகுதி வளர்ச்சியில் புரட்சித்தலைவர் அதிக ஆர்வம் கொண்டிருப்பதாக அமைச்சர் சாத்தூர் ராமச்சந்திரன் கூறினார் அருப்புக்கோட்டை வட்டத்தில் டி. வேப்பங்குளம் என்ற இடத்தில் மக்கள் குறை தீர்க்கும் நாள் நடைபெற்றது.

இந்த விழாவில் கலந்து கொண்ட கூட்டுறவுத் துறை அமைச்சர் அரசின் நலத்திட்ட உதவிகளையும், வீட்டுமனைப்பட்டாக்களையும் வழங்கினார் கறவை மற்றும் மாடுகள் வாங்க 34 பேருக்கு ரூபாய் 1 லட்சத்து ஆறாயிரம் கடனாகவும், ரூபாய் 37,000 மானியமாகவும் வழங்கினார். அப்போது அமைச்சர் பேசும்போது கூறியதாவது:

இப்படிப்பட்ட தொலைதூர கிராமங்களில் நடைபெறும் மக்கள் குறை தீர்க்கும் நாளில் பங்கேற்பதின் மூலம் கிராமத்தில் உள்ள மக்களின் பல்வேறுபட்ட குறைகளை நேரில் கேட்டு அறியமுடிகிறது. முதல்வர் புரட்சித்தலைவரை நான் சென்னையில் சந்தித்தேன். அப்போதுஎன்னிடம்அவர் என்னுடைய அருப்புக் கோட்டை தொகுதி எப்படி உள்ளது என்று கேட்டார் அந்த தொகுதியில் என்னென்ன குறைகள்உள்ளதோ அவைகளைஎல்லாம் நிவர்த்திக்க தக்க ஏற்பாடுகள் செய்யுங்கள் என்றார். அதன்படிதான் இங்கே1925 பேருக்கு பட்டாக்கள் தரப்பட்டுள்ளன. மற்றும்அரசு உதவிகளும் இங்கே வழங்கப்பட்டுள்ளன. இப்பகுதியில் 140 கி. மீட்டருக்கு தார்ரோடு வசதியும், குடிநீர் பிரச்சினையைபோக்க அடியம்புகளும் மற்றும் மேல் நிலை நீர்த்தேக்கத் தொட்டியும் கட்டி முடிக்கப்பட்டுள்ளன இப்பகுதி மக்களுக்கு டவுன் பஸ்வசதியள்ளிகள் இல்லாத இடங்களுக்கு பள்ளிகளும் பள்ளிகட்டிடங்கள்இல்லாத பள்ளிக்கு கட்டிடங்களும் விரைவில் கட்டித்தரப்படவுள்ளன. இனிஇப்பகுதி மக்கள் எந்தக் குறை என்றாலும் எங்களிடம் கூறுங்கள் உடனே நிவர்த்தி செய்கிறோம். இப்பகுதி முன்னேற புரட்சித்தலைவர் அரசு எல்லா உதவிகளும் செய்யும்.

இவ்வாறு சாத்தூர் ராமச்சந்திரன் கூறினார்.

இம்மக்கள் குறைதீர்க்கும் நாளில் மாவட்ட ஆட்சித் தலைவர் விஜயராகவன் மாவட்ட வருவாய் அதிகாரி கே.எம். சுப்பிரமணியம், மாவட்ட மக்கள் தொடர்பு அதிகாரி தினதயாளன், மாவட்ட திட்ட முகமை அலுவலர் கருவேலம்மற்றும்மாவட்ட அதிகாரிகள் அனைவரும் கலந்து கொண்டனர்.

# ரூ. 3 லட்சத்துக்கு ஏலம் போன மதுரை மாநகர் சாராயக் கடை

மதுரை, ஜூன் 21— மதுரை நகரில் உள்ள ஒரு சாராயக் கடை மட்டும் 3லட்ச ரூபாய்க்கு ஏலம் போனது.

மதுரை மாவட்டத்தில் உள்ள 302 சாராயக் கடைகளுக்கு ஏலம் நடைபெற்றது. இந்த கடைகளின் மூலம் அரசுக்கு மாதந்தோறும் 53 லட்ச ரூபாய் ஏலம் வருமானம் கிடைக்கும் என்று எதிர்பார்க்கப்பட்டது ஆனால் 80லட்ச ரூபாய்க்கு அந்த கடைகள் ஏலம் போயிருக்கிறது. 273 கடைகள் ஏலம்விடப்பட்டதனால் அரசுக்கு எதிர் பார்த்த தொகையை விட 60 சத விகிதம் கூடுதலாக ஏலத்தொகை வந்துள்ளது.

வரும் ஜனவரி 1-ந்தேதியோடு சாராயக்கடைகளை அரசு மூட உத்தரவிட்டிருப்பதால் ஐந்து மாத காலத்திற்குத்தான் ஏலம்விடப்பட்டுள்ளது.

மதுரை நகரில்ரயில்நிலையத்திற்கு எதிரேயுள்ள க்லேஜ்அவுஸ்அருகில்உள்ள சாராயக்கடை மட்டும் மாதம் 3 லட்ச ரூபாய் கிஸ்திக்குஏலம் போய்உள்ளது.

# அமைச்சர் நிகழ்ச்சிகள்

**ப-உ-ச.**

ஜூன் 22 திருவண்ணாமலை கல்வராயன்மலை.

ஜூன், 23. திருச்சி கரூர், சேலம்



# தி. மு. க. சேர்மன் அடாவடி: ஆசிரியர் மறியல் போர்

தஞ்சை, ஜூன் 21— நகராட்சி ஆசிரியர்கள் அனைவரையும் ஒட்டு மொத்தமாக மாறுதல் செய்த திமு.க. நகராட்சித் தலைவரின் அராஜகப் போக்கைக் கண்டித்து ஆசிரியர்கள் மறியல்போராட்டம் நடத்துகிறார்கள்.

தஞ்சை நகராட்சித் தலைவராக திமுகழகத்தை சேர்ந்தவர் இருக்கிறார், இவர் பதவிஏற்றதும்முதல் காரியமாக அனைத்து ஆசிரியர்களையும்மூலைக்கு ஒருவராக மாற்றினார்.

இதனை நகராட்சி ஆசிரியர்கள் அனைவரும் கண்டித்தனர் அனைத்து ஆசிரியர்களையும் ஒரே நாளில் ஒரே உத்தரவில் -UNIQUEமாற்றும் அலங்கோலம் நிறுத்தப்பட வேண்டும் என்று கோரினர்.

## சண்டித்தனம்

நகர மன்ற தி.மு.க. தலைவர் மாற்றியது மாற்றியதுதான் என்று கூறிவிட்டார்.

அதன் பின்னர் ஆசிரியர்கள் ஊரக வளர்ச்சித்துறை செயலாளரிடம் முறையிட்டனர்

அனைத்துஆசிரியர்களையும் ஒரே நாளில் ஒரே உத்தரவில் மாற்றும் கொடுமை இதுவரை உலகம் கண்டிராத கொடுமை திமுக நிர்வாகத்தில் இந்தக்கொடுமை கொடிகட்டிப் பறக்கிறது என்றும் முறையிட்டனர்.

## நொண்டி சமாதானம்

அனைத்து ஆசிரியர்களையும் பந்தாடுவது போல் மூலைக்கு ஒருவராக ஏன் மாற்றினீர்கள்என்று ஊரக வளர்ச்சித்துறை செயலர் தஞ்சை நகராட்சியைக் கேட்டார்.

ஆசிரியர்களின் விருப்பத்தின் பேரில் தான் மாறுதல் செய்தோம் என்றுஒருஅயாண்டமான பொய்யையே தி.மு.க நகராட்சி நிர்வாகம் பதிலாகத் தந்தது.

அதன்பின்னர் தி.மு.க. நகராட்சி நிர்வாகத்தின் துக்ளக் தர்பாரைக் கண்டித்து மறியல் போராட்டம் நடத்துவது என்று ஆசிரியர்கள் முடிவு செய்து இருக்கிறார்கள்.

இந்தமறியல் போராட்டம் இம்மாதம் 26ந் தேதி காலை எட்டு மணிக்கு தஞ்சைநகராட்சி அலுவலகம் முன்பு ஆரம்பமாகிறது.

தஞ்சை நகராட்சி ஆசிரியர்களின் போராட்டத்திற்கு ஆதரவுதர எல்லா ஆசிரியர் சங்கங்களும் முன்வந்துள்ளது.

# மரம் நடு விழா

விருதுநகர், ஜூன். 21— விருதுநகரில்உள்ளஸ்டேட் பாங்க்ஆப் இந்தியா பாரத வங்கியின் கிளை சார்பில் உலகச் சுற்றுப்புறச்சூழல் மாசுக்கட்டுப்பாடு நாள் கொண்டாடப்பட்டது

விழாவிற்கு விருதுநகர் நகராட்சித் தலைவர் ஆர். சொக்கர் தலைமை தாங்கி, மரக்கன்று ஒன்று நட்டு வைத்தார். விழாவிற்கு வருகை தந்த மாவட்ட மக்கள்தொடர்பு அலுவலர் தினதயாளன் மற்றும் பத்திரிகையாளர்கள். வாடிக்கையாளர்கள் அனைவரும் மரக்கன்றுகளை நட்டார்கள். விழாவிற்கு வருகை தந்த அனைவரையும் வங்கி மேலாளர் லட்சுமி நாராயணன் வரவேற்றார்.

## பட்டுராசன் நிகழ்ச்சி

ஜூன்: 22 ஈரோடு. மல்லம்பாளையம்,

23 மதுரை

24 நாகர்கோவில்

25 குளச்சல்

26 திருச்சி

# கழகபொதுச்செயலாளர் எஸ். இராகவானந்தம் நிகழ்ச்சிகள்

| | | | |
|---|---|---|---|
| 21-6-86 | இரவு | 8-15 | செங்கோட்டை பாசஞ்சர் மூலம் கும்பகோணம் புறப்படுதல் |
| 22-6-86 | காலை | 6-35 | கும்பகோணம் |
| | காலை | | தொழிற்சங்கத்தலைவர் கோ. வெங்கடாசலம் இல்லத்திருமணம் |
| | இரவு | | பொதுக்கூட்டம் |
| | இரவு | 10-30 | ராமேஸ்வரம் எக்ஸ்பிரஸ் மூலம் சென்னைபுறப்படுதல் |
| 23-6-86 | காலை | 9 | சென்னை |

# சென்னை மாவட்ட அண்ணா தொழிற்சங்க நிர்வாகிகள் ஆலோசனைக் கூட்டம்

வருகிற 24-6-86 மாலை 5-00 மணிக்கு சென்னை மாவட்ட அண்ணா தொழிற்சங்க நிர்வாகிகள் ஆலோசனைக் கூட்டம் கழகத் தலைமை நிலையத்தில் நடைபெறவிருப்பதால் பேரவையில் இணைந்துள்ள அனைத்து அண்ணா தொழிற் சங்க நிர்வாகிகள் தவறாது கலந்து கொண்டு கூட்டத்தை சிறப்பிக்க வேண்டுகிறேன்.

மேற்படி கூட்டத்தில் பேரவை பொதுசெயலாளர் திருமிகு வை. பெருமாள் அவர்களும்

பேரவை பொருளாளர்

திரு கே. இராசேந்திரன் அவர்களும்

கலந்து கொண்டு ஆலோசனை வழங்க இருக்கிறார்கள் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

**வெ மாயன்**

செயலாளர்

சென்னை மாவட்ட

அண்ணா தொழிற்சங்கம்

சென்னை-14

20-6-86

# பிளஸ் 2 தேர்வு: மார்க் பட்டியல் அறிவிப்பு

சென்னை, ஜூன் 21— கடந்த ஏப்ரல் மே மாதங்களில் மேல்நிலைத் தேர்வு எழுதிய தனித் தேர்வர்கள் தங்களது மதிப்பெண் சான்றிதழ்களைஏற்கனவே அவர்கள் இத்தேர்விற்கான தேர்வுக்கூட நுழைவுச்சீட்டுகளைப் பெற்றுக்கொண்ட தேர்வுகூட நுழைவுச்சீட்டு வினியோக மையங்களுக்கு வரும் 25ந் தேதி முதல் ஜூலை 3ந் தேதிக்குள் நேரில் சென்று பெற்றுக் கொள்ளுமாறு கேட்டுக் கொள்ளப்பட்டுள்ளனர்.

மதிப்பெண்சான்றிதழ்கள் அவர்களது இருப்பிட முகவரிகளுக்கு தபால் மூலம் அனுப்பப்படமாட்டாது.

# நாட் குறிப்பு

## 51-வது வட்டம்

சென்னை துறைமுகம் பகுதி 51-வது வட்டம் சார்பில் கழக பொதுக் கூட்டம் 22-ந் தேதி மாலை 6 மணி அளவில் காமராசர் சாலை சத்தியா நகரில்ஏழுமலை தலைமையில் நடைபெறுகிறது.

இக் கூட்டத்தில் என்.வி. என் செல்வம் வளர்மதி, எம் எல் ஏ, எப் வி, ராமன், மண்ணடி கிருஷ்ணமூர்த்தி கஜேந்திரபாபு,மற்றும் அருள் ஜெகநாதன், முத்து மற்றும் பலர் பேசுகின்றனர். இரவு டி எம். ஜானி குழுவினரின் கலை நிகழ்ச்சி நடைபெறும்.

# ஜூன் 29-ம் தேதி புரட்சித்தலைவர் அவர்களின் ஆட்சியின் 10-வது ஆண்டு தொடக்கத் திருவிழா சிறப்பு நிகழ்ச்சிகள்

## கழக கொள்கை பரப்புச் செயலாளர் அறிவிக்கும் நான்காவது பட்டியல்

வருகிற ஜூன் 29-ம் தேதியன்று (ஞாயிற்றுக்கிழமை) சிறப்பு நிகழ்ச்சிகள் நடைபெறவுள்ள முக்கிய நகரங்கள், நிகழ்ச்சிகளின் விவரங்கள், அவற்றில் பங்கு பெறுவோர் ஆகிய விவரங்கள் அடங்கிய நான்காவது பட்டியல் கீழே தரப்பட்டுள்ளது. சம்பந்தப்பட்ட மாவட்டக் கழகச் செயலாளர்கள்பட்டியலில் குறிப்பிடப்பட்டுள்ளவர்களுடன் உடனடியாகத் தொடர்புகொண்டு நிகழ்ச்சிகளுக்கு ஏற்பாடு செய்யுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறேன்.

ஏற்கனவே அறிவிக்கப்பட்ட சில மாவட்ட நிகழ்ச்சிகளில் மாற்றங்களை குறிப்பிட்டு கவனிக்கும்படியும் வேண்டுகிறேன்.

கழக நிறுவனத் தலைவர் இதயதெய்வம் மாண்புமிகு தமிழக முதல்வர் **டாக்டர் புரட்சித்தலைவர்** அவர்களின் அனுமதியோடு இந்த நான்காவது பட்டியல் வெளியிடப்படுகிறது

சென்னை.
21-06-1986

**ஜெயலலிதா எம். பி.**
கொள்கை பரப்புச் செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம்

### ஜூன்-29

**அண்ணா மாவட்டம்**
**திண்டுக்கல்**
இசையரங்கம்
இசைத்தென்றல்
திரு. டி. எல். மகராசன்
குழுவினர் இன்னிசை

**காமராசர் மாவட்டம்**
**விருதுநகர்**
ஆடலரங்கம்
நடராஜ் - சகுந்தலா
குழுவினர் நடனம்

**திருநெல்வேலி**
ஆடலரங்கம்
திருமதி. சந்திரா - தண்டாயுதபாணி
குழுவினர் நடனம்

**கரூர்**
நாயன நல்லிசை
நாதஸ்வரம்
கலைமாமணி
நாமகிரிப்பேட்டை கிருஷ்ணன்
குழுவினர்

**மதுரை மாநகர்**
கவியரங்கம்
தலைப்பு: இதயதெய்வம் மாண்புமிகு தமிழக முதல்வர் டாக்டர்
புரட்சித்தலைவர்
அவர்கள் ஆற்றிய அரும்பணிகள்
தலைமை:
கவிஞர் வாலி
(தலைவர், தமிழ்நாடு இயல் இசை நாடக மன்றம்)
கவிஞர் இளந்தேவன் -ஆட்சி நலம்
கவிஞர் மணிமொழி - கலைத் தொண்டு
கவிஞர் தஞ்சை தமிழழகன் -வெற்றிச் சிறப்பு

### ஜூன் 30

**ராமநாதபுரம்**
இசையரங்கம்
நவரசம் ஜி கே எஸ்
குழுவினரின் இன்னிசை நிகழ்ச்சி
வழக்காடு மன்றம்
தலைப்பு:
தமிழ்நாட்டுக்கும் அண்ணாவின் கொள்கைகளுக்கும் கருணாநிதிசெய்ததுரோகம் ஆட்சியில் இருந்த போது அதிகமா? எதிர்க்கட்சியாக இருக்கும்போது அதிகமா?
தலைமை:
திரு. மானாமதுரை ராஜேந்திரன்
நடுவர்:
திரு. திருப்பூர் மணிமாறன்
ஆட்சியில் இருந்த போது:
திரு. கோடம்பாக்கம் குமார்
திரு. நாஞ்சில் நீ. மணிமாறன்
திருமதி. வண்ணை அனுராதா
எதிர்க்கட்சியாக இருக்கும்போது
திரு. என். வி. என். செல்வம்
திரு. மானகிரி பாண்டியன்
திருமதி. பா. வளர்மதி

**தஞ்சை மாவட்டம்**
**குத்தாலம்**
திரு. நெல்லை பாலாஜி

**மதுரை மாவட்டம்**
**உசிலம்பட்டி**
திரு. கே. ஆர். பி. மணிமொழியன்

### ஜூலை 6
(ஞாயிற்றுக்கிழமை)

**கர்நாடக மாநிலம்**
**பெங்களூர்-பெரியார் நகர்**
இசையரங்கம்
நவரசம் ஜி.கே.எஸ்.
குழுவினர் இன்னிசை
சிறப்புரை:
திரு நெல்லை பாலாஜி

# ராமநாதபுரம் மாவட்ட கழக ஆலோசனை கூட்டம்

ராமநாதபுரம், ஜூன் 21-ராமநாதபுரம்மாவட்ட கழக ஆலோசனைக் கூட்டம் அமைச்சர் டி. ராமசாமி தலைமையில் மாவட்டச் செயலாளர் தென்னவன் முன்னிலையில் சேதுபதி திருமணமண்டபத்தில் நடைபெற்றது

# முன்னாள் தலைமை நீதிபதி மரணம்: சென்னையில் இரங்கல்

சென்னை ஜூன் 21— சென்னை உயர்நீதி மன்ற முன்னாள் தலைமை நீதிபதி பி.கோவிந்தன் நாயர் கடந்த மே மாதம் 26-ம் தேதி அன்று அமெரிக்காவில் மரணம் அடைந்தது தெரிந்ததே

அவரின் மறைவுக்கு இரங்கல் தெரிவிக்கும் வகையில் சென்னை உயர்நீதி மன்ற வளாகத்தில் உள்ள அனைத்து நீதி மன்றப் பணிகளும் நிறுத்தி வைக்கப்பட்டன,

இந்தஇரங்கல் கூட்டத்தில் மறைந்த தலைமை நீதிபதியின் குடும்பத்துக்கு அனுதாபம் தெரிவிக்கப்பட்டது.

இரங்கல் கூட்டத்திற்கு தலைமை நீதிபதி சந்துர்கர் தலைமை வகித்தார் நீதிபதிகள், அட்வகேட் ஜெனரல் கிருஷ்ணமூர்த்தி அரசுவழக்கறிஞர் பத்மினி ஜேசுதுரை மற்றும் வழக்கறிஞர்கள் பலரும் கலந்து கொண்டனர்.

# அரியானாவுக்கு நிலம் தரும் விவகாரம்
# நீதிபதி கமிஷன்: முதல்வர் ஏற்க மறுப்பு

புதுடெல்லி, ஜூன். 21- அரியானாவுக்கு பஞ்சாப் நிலம் கொடுப்பது பற்றி முடிவு செய்ய நீதிபதி தேசாய் தலைமையிலான கமிஷனை மத்திய அரசு நியமித்தது ஆனால் அதை பஞ்சாப் முதல்வர் பர்னாலா ஏற்க மறுத்தார்.



சண்டிகர் பஞ்சாப் மாநிலத்திற்கும், அரியானாவிற்கும் பொது தலைநகரமாக இருந்து வருகிறது. சண்டிகரை பஞ்சாபிற்கு வழங்கவேண்டும் என்று சீக்கிய தீவிரவாதிகள் கோரி வந்தனர்.

சண்டிகரை பஞ்சாப்பிற்கு கொடுத்து விட்டால் அதற்கு பதிலாக பஞ்சாப்பில் உள்ள இந்தி பேசும் பகுதிகளைக் கண்டறிவதற்காக வெங்கட்ராமையா கமிஷனை மத்திய அரசு நியமித்தது.

இந்த கமிஷன் விசாரணை நடத்தி சண்டிகருக்குப் பதிலாக 70 ஆயிரம் ஏக்கர் நிலம் வழங்கப்பட வேண்டும். அந்த 70 ஆயிரம் ஏக்கரில் எந்தெந்த கிராமங்களை கொடுக்கலாம். என்பதை தீர்மானிக்க புதிய கமிஷன் நியமிக்கப்பட வேண்டும் என்று சிபாரிசு செய்தது.

இதைத் தொடர்ந்து 70 ஆயிரம் ஏக்கரில் எந்த எந்த கிராமங்களை அரியானாவிற்கு கொடுக்கலாம் என்று முடிவு செய்வதற்காக புதிய கமிஷனை மத்திய அரசு நியமித்து உள்ளது.

## தேசாய் கமிஷன்

இந்த கமிஷனின் தலைவராக நீதிபதி டி.ஏ. தேசாய் நியமிக்கப்பட்டு இருக்கிறார்.

அவர் தற்போது சட்ட கமிஷன் தலைவராக இருந்து வருகிறார்.

அவர் இன்று (சனிக்கிழமை) பகல் 12 மணிக்குள் தனது அறிக்கையை தாக்கல் செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்ளப்பட்டு இருக்கிறார்.

புதிய கமிஷனை ஏற்க பஞ்சாப் அரசு மறுத்து விட்டது. பஞ்சாப் முதல்வர் பர்னாலா டெல்லியில் இருப்பதால் அவருக்கு பதிலாக பஞ்சாப் நிதி அமைச்சர் பல்வந்த் சிங் ஒரு அறிக்கை வெளியிட்டு இருக்கிறார்.

அதில் சண்டிகருக்கு பதிலாக அரியானாவிற்கு வழங்கப்பட வேண்டிய பகுதிகளைக் கண்டறிவதற்காக நீதிபதி டி.ஏ. தேசாய் தலைமையில் நியமிக்கப்பட்டுள்ள புதிய கமிஷன் நீதி முறைக்கு எதிரானது. இதனால் அதை நாங்கள் ஏற்கமுடியாது என்று அந்த அறிக்கையில் கூறியுள்ளார்.

## திடீர் மாற்றம்

பஞ்சாப் மாநிலத்திற்கு சண்டிகர் தலை நகரம் இன்று மாற்றப்படுவதாக முன்னர் அறிவிக்கப்பட்டிருந்தது இதில் இப்போது திடீர் மாற்றம் ஏற்பட்டுள்ளது

நேற்று டெல்லி போய் இருந்த பஞ்சாப் முதல்வர் பர்னாலா பிரதமர் ராஜீவ் காந்தியை நேற்று இரவு சந்தித்து தலைநகர் மாற்றத்தை தள்ளி வைக்கும்படி கேட்டுக் கொண்டார்.

இதை ராஜீவ் காந்தி ஏற்றுக் கொண்டார்.

இதைத் தொடர்ந்து சண்டிகர் பஞ்சாப்பிற்கு இன்று மாற்றப்பட இருந்ததும், சண்டிகருக்கு பதிலாக அரியானா மாநிலத்திற்கு 70 ஆயிரம் ஏக்கர் நிலம் கொடுக்கப்பட இருந்ததும் தற்போது தள்ளி வைக்கப்பட்டுள்ளது.

சண்டிகர் தலைநகர் பஞ்சாபிற்கு மாற்றப்படுவது வரும் ஜூலை மாதம் 15ந் தேதிக்கு தள்ளிவைக்கப்பட்டிருப்பதாக அறிவிக்கப்பட்டுள்ளது.

மக்கள் கட்சித்தலைவர் தேவிலால், பஞ்சாப் சட்டசபை கூட்டத்தை தங்கள் கட்சி புறக்கணிக்கும் என்று அறிவித்து இருக்கிறார்.

பஞ்சாப் ஒப்பந்தத்தை எதிர்த்து கடந்த ஆண்டு ஆகஸ்டு மாதம் மக்கள் கட்சி எம். எல். ஏக்கள் ஒட்டுமொத்தமாக ராஜினாமா செய்தனர், ஆனால் அந்த ராஜினாமாவை சபாநாயகர் ஏற்க மறுத்து விட்டார் என்பது குறிப்பிடத்தக்கது.

பஞ்சாப்புடன் சண்டிகரை இணைப்பதை எதிர்த்து அரியானாவில் முழு அடைப்பு போராட்டம் இன்று நடத்தப்படுகிறது. இதைத்தொடர்ந்து அங்கு பஸ், ரயில் போக்குவரத்து ரத்து செய்யப்பட்டுள்ளது.

# லோக்சபா & ராஜ்யசபா செக்ரடேரியட்டுகள்

ராஜ்ய சபா செக்ரடேரியட்டில் தமிழிலிருந்து ஆங்கிலத்திற்கு பார்லிமெண்டரி மொழி பெயர்ப்பாளர் (INTERPRETER) பதவிக்கான விண்ணப்பங்கள் ரூ. 700 - 40 - 900 - EB - 40 - 1100 - 50-1300 சம்பள விகிதத்திலும் (விதிகளுக்குட்பட்ட வழக்கமாக அளிக்கப்படும் அலவன்ஸுகளும் சேர்த்து) வரவேற்கப்படுகின்றன. தற்போதுள்ள சம்பள விகிதப்படி. குறைந்த பட்ச மொத்த ஊதியம் ரூ. 2019=00 ஆகும். மேற்கண்ட பதவிக்கு தேவைப்படும் கல்வியோக்யதாம்சம் கீழ்வருமாறு:-

வயது: 1-8-1986 அன்று 30 வருடங்களுக்கு குறைவாக இருக்கவேண்டும், அரசு நிரந்தர ஊழியர்கள் மற்றும் SC/ST இனத்தவர்களாயின் 5 வருடங்களும், மற்றும் இதர ஒரு சில இனத்தவருக்கு 3 வருடங்கள் வரையிலும் வயது வரம்பு தளர்த்தப்படும்.

கல்வியோக்யதாம்சம் & அனுபவம்:

i) மொழி பெயர்க்கப்பட வேண்டிய மொழியில் M. A. பட்டமும் மற்ற மொழியில் B. A. பட்டமும் அல்லது மாற்று வகையில் ii) இரண்டு மொழிகளிலும் திறமையாக எழுத, பேசவும்.

iii) இரண்டு மொழிகளிலும் தற்போதைய முறைக்கு ஏற்ப (Modern Forms) உபயோகப்படுத்துவதற்கு தேர்ச்சி பெற்றிருத்தல் அவசியம்.

குறிப்பு:- எனினும், ஆங்கிலம், தமிழ் நீங்கலாக இதர பாடங்களில் M. A. பட்டம் பெற்றவர்களும் அல்லது சட்டப் படிப்பில் B. A. படிப்புடன், தமிழில் B. A. பட்டம் பெற்றவர்களும் இந்த பதவிக்கு கருதப்படுவார்கள்-மேலும் அவர்கள் இந்த பதவிக்கு விண்ணப்பிக்க தகுதி பெற்றவர்களாக இருக்கவேண்டும்.

விண்ணப்பிக்கும் விதம்:- அனுபவத்துடன், மேற்கண்ட பதவிக்கு தேவைப்படும் குறைந்த பட்ச கல்வி யோக்யதாம்சங்கள் பெற்றுள்ள விண்ணப்பதாரர்கள் கீழே குறிப்பிட்டுள்ள வகையில் அதே முறையில் விண்ணப்பிக்கலாம். விண்ணப்பங்கள் ஒரு கவரின்மீது "Parliamentar Interpreter (Tamil)" என்று எழுதி அதனை "சீனியர் பர்ஸனல் & எக்ஸிகியூடிவ் ஆபீஸ (E) லோக்சபா ராஜ்யசபா செகரடேரியட்ஸ், 521 பார்லிமெண்ட் ஹவுஸ் அன்னெக்ஸ் புதுடில்லி-110001 விலாசமிட்டு 1986 ஜூலை 21ம் தேதிக்கு முன்னதாக கிடைக்குமாறு அனுப்பவேண்டும்.

விண்ணப்ப நமூனா

1. விண்ணப்பிக்கும் பதவியின் பெயர் — பாஸ்போர்ட் சைஸ்
2. பெயர் (பெரிய எழுத்துக்களில்) — போட்டோ
3. தகப்பனார்/கணவர் பெயர்
4. தகவல் தெரிவிப்பதற்கான விலாசம்
5. நிரந்தர வீட்டு விலாசம்
6. பிறந்த தேதி
7. SC/ST. இனத்தவராயின் ஜாதி இனம் குறிப்பிடவும்.
8. கல்வியோக்ய தாம்சங்கள் (தேர்ச்சிபெற்றதேர்வுகள் விவரம், பாடங்கள், டிவிஷன். தேர்வு பெற்ற வருடங்கள் பெற்ற மதிப் பெண்கள்).
9. கல்வி போதிப்பதில் அனுபவம் மொழி பெயர்ப்பதிலும், மொழி மாற்றம் செய்வதிலும், அனுபவம் (போதிய நற்சான்றுகளுடன்)
10. தற்போது வகிக்கும் பதவி மற்றும் அனுபவம் பதவியின் பெயர், பணி விவரம், சம்பள விகிதம் பெற்ற சம்பளம், காலம், முழு விலாசம். பணி புரிந்த நிறுவனத்தின் பெயர். அரசு சம்பந்தப்பட்ட பதவியா? அல்லது தனியார் நிறுவனமா? விவரம் தேதி

விண்ணப்பதாரரின் பெயர்:

a) நற்சான்றிதழ்களின் அத்தாட்சி பெற்ற நகல்கள் (ஒரிஜினல் அல்ல) கல்வி யோக்ய தாம்சங்கள் நகல்கள், பிறந்த தேதி. அனுபவம் குறித்த சான்றிதழ் நகல்கள் விண்ணப்பத்துடன் இணைத்து அனுப்பப்படவேண்டும். இல்லையேல் விண்ணப்பம் ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது

b) மத்திய மாநில அரசு இலாக்காக்கள் அரசு நிறுவனங்கள் பொதுத்துறை நிறுவனங்கள் ஆகியவற்றில் பணிபுரிபவர்கள் தங்கள் மேலதிகாரிகள் மூலமாக விண்ணப்பிக்க வேண்டும்

C) தேர்ந்தெடுக்கப்பட்ட விண்ணப்பதாரர்களுக்கு மொழிமாற்றம்/ தேர்வு மற்றும் நேர்முக தேர்வு ஆகியவை நடைபெறும் தேதிகள் குறித்து அறிவிக்கப்படும். எனவே அவர்கள். Audition & Interpretation Test களில முதற்கட்ட தேர்வுகளில் கலந்துகொள்ள வேண்டும். இந்த முதற்கட்ட தேர்வுகளில் வெற்றி பெற்ற விண்ணப்பதாரர்கள் மேலும் பயிற்சியளிக்கப்பட்டு அதற்கு பின்னர் செலக்ஷன் தேர்வு நடைபெறும்.

d) விண்ணப்பதாரர்கள் தேர்வுகள் எழுதுவதற்கு தங்கள் சொந்த பொறுப்பில், செலவில் புதுடில்லிக்கு வரவேண்டும், எனினும், தாழ்த்தப்பட்ட / பழங்குடி இனத்தைச் சேர்ந்த நேர்முக தேர்வு / பரீட்சை ஆகியவற்றிற்கு அழைக்கப்படும் விண்ணப்பதாரர்கள் போக வர இரண்டாம் வகுப்பு கட்டணமும் போக்குவரத்து அலவன்ஸும் வழங்கப்படும்.

davp 663 (6) 86

# பொது இடத்தில் புகை பிடிக்கத் தடை: இத்தாலியில் சட்டம்

ரோம் ஜூன் 21-பொது இடங்களில பீடி, சிகரெட் போன்றவற்றை புகைப்பதை தடை செய்யும் சட்டத்தை இத்தாலி அரசு கொண்டுவர முடிவு செய்துள்ளது

ஆஸ்பத்திரி மற்றும் ரயில் பஸ் நிலையங்கள் பணிபுரியும் இடங்கள் ஆகியவற்றில் புகைப்பதை இசசட்டம் தடை செய்கிறது அலுவலகங்களில் தனியாக உள்ள இடங்களில்மட்டுமே புகை பிடிக்கலாம் மற்ற இடங்களில்சிகரெட்புகைத்தால் குற்றம் என்கிறது இச்சட்டம்

இழுக்க இழுக்க இன்பம் தரும் என்றெல்லாம் சிகரெட்டு தயாரிப்பாளர்கள் இங்கே விளம்பரம் செய்கிறார்கள் அல்லவா? இத்தாலி நாட்டுசட்டப்படி சிகரெட்டுக்கு விளம்பரம் செய்யக்கூடாது 16 வயதுக்கு குறைந்தவர்கள்புகையிலை சம்பந்தப்பட்ட பொருள்களை வாங்குவதே குற்றம் என்று தடுக்கிறது இச்சட்டம்.

தற்போது இத்தாலியில் வருடத்துக்கு 10 கோடி சிகரெட் விற்பனையாகிறது.

# வாலிபரை ஓட ஓட துரத்தி சுட்டு கொன்ற கொடுமை

புதுடெல்லி, ஜூன் 21- டெல்லியில் ஒருவாலிபரை ஓட ஓட துரத்தி கொலை செய்தனர்.

லஜபதி நகரில் இந்தசம்பவம் நடந்தது. ஒருபள்ளி ஆசிரியரின் மகன் பிரதீப். (வயது 26) அவருக்கும் மற்றொருவருக்கும் முன்விரோதம் இருந்து வந்தது. எதிரிகள் மூவர் பிரதீப்பை ஒரு பூங்காவில் பார்த்தனர்

துப்பாக்கியுடன் அவர்கள் அங்குசென்றனர். உடனே பிரதீப் ஓட ஆரம்பித்தார். மூன்று பேரும் அவரை துரத்தினர்

டெல்லிவீதியில் ஓடவே பிரதீப்பை அந்த நபர்கள் நாட்டு துப்பாக்கியால் சுட்டுக் கொன்றனர்

இது குறித்து டெல்லி போலீசார் புலன் விசாரணை நடத்தி வருகிறார்கள்

# வாட்டல் நாகராஜ் மிரட்டல்

பெங்களூர், ஜூன் 21— கர்நாடக முதல்வருடன் மராத்திய தலைவர்கள் பேச்சுவார்த்தை நடத்த இருக்கின்றனர் பேச்சுவார்த்தை நடத்த வரும் சரத்பவார், எஸ். எம். ஜோஷி போன்றோருக்கு எதிராககறுப்புக் கொடி போராட்டத்தில் தாம் ஈடுபடப் போவதாக வாட்டல் நாகராஜ் மிரட்டியுள்ளார்.

மராத்தியதலைவர்களின் பேச்சுக்கு கட்டுப்பட்டு மொழிக் கொள்கையில் ஹெக்டே பின்வாங்கினால் அவரை எதிர்த்து பெரும் போராட்டத்தில் ஈடுபட போவதாகவும் வாட்டல்நாகராஜ் மிரட்டியுள்ளார்.

# மேல்நிலைக்கு உயரும் ஆதிதிராவிடர் பள்ளி: அருணாசலம் தகவல்

சென்னை, ஜூன் 21— நடுநிலை உயர்நிலைப் பள்ளிகளாக இருக்கும் ஆதிதிராவிடர்பள்ளிகள் இந்த ஆண்டு தரம் உயர்த்தப் படுகிறது என்று அமைச்சர் அருணாசலம் தெரிவித்தார்.

இதுகுறித்து ஆதிதிராவிடர் நலத்துறை அமைச்சர் அருணாசலம் கூறியிருப்பதாவது:-

தமிழகத்திலுள்ள 21 ஆதிதிராவிடர் நடுநிலைப் பள்ளிகளை உயர்நிலைப் பள்ளிகளாக இவ்வாண்டு உயர்த்தி அரசு ஆணை பிறப்பித்துள்ளது

செங்கற்பட்டுமாவட்டத்தில் பெத்தகலக்காட்டூர் இரும்பேடு வடாற்காடு மாவட்டத்தில் காரை, அலமேலு மங்காபுரம், எலத்தூர், தஞ்சை மாவட்டத்தில் தஞ்சப்பனை, நடுவக்குறிச்சி, கொண்டைப்பட்டுக்கோட்டை. கல்லூரணிக்காடு, திருச்சி மாவட்டத்தில் கீழ்அன்பில், பாலகிருஷ்ணம்பட்டி, பொய்கைப்பட்டி, எஸ். கே. பாளையம், ஆலம்பாடி, நத்தக்காடு, புதுக்கோட்டை மாவட்டத்தில் முள்ளன்குறிச்சி, காமராஜர் மாவட்டத்தில் கரிசல்குளப்பட்டி பசும்பொன்முத்துராமலிங்கம் மாவட்டத்தில் கல்லல் தென்னாற்காடு மாவட்டத்தில் [illegible] ஆகிய ஊர்களில உள்ள நடுநிலைப் பள்ளிகள் உயர்நிலைப் பள்ளிகள் ஆகின்றன.

செங்கற்பட்டுமாவட்டத்தில் உள்ள வடகரை திருச்சி மாவட்டத்தில் உள்ள திருத்தலையூர் துலையநத்தம், தஞ்சை மாவட்டத்தில் நெடுங்குளம் சேலம் மாவட்டத்தில் களங்காணி, கன்னியாகுமரி மாவட்டத்தில் பதுக்கனி ஆகிய உயர்நிலைப் பள்ளிகள் மேல் நிலைப் பள்ளிகளாக உயர்த்தப் படுகின்றன.

இதற்காக இந்த ஆண்டு மட்டும் 41 லட்சரூபாய் கூடுதல் செலவாகும்.

இவ்வாறு அமைச்சர் அருணாசலம் கூறினார்.

# ரஜினீஷ் சாமியாருக்கு மீண்டும் கல்தா: நாடற்று அலைகிறார்

மான்டிவிடியோ ஜூன் 21— ரஜினீஷ் சாமியார் மீண்டும் நாடு இழந்து அலைகிறார்

செக்ஸ்சாமியார் ரஜினீஷ் அமெரிக்காவில் முகாமிட்டிருந்ததும் அந்த நாடு அவருக்கு கல்தா கொடுத்ததும் தெரிந்தது.

கிரேக்க நாட்டில் தங்க முயன்றார் அவரை கிரேக்கம் ஏற்றுக் கொள்ள வில்லை. பின்னர் இங்கிலாந்துநாடு நிராகரித்தது

கடைசியில் உருகுவே நாட்டில் தஞ்சம் புகுந்தார் 90 நாட்கள் தங்க அந்த நாடு விசா கொடுத்தது

அங்கு தனது கவர்ச்சி அழகிகளுடன் ரஜினீஷ் தங்கினார்

விசா முடிந்ததும் தொடர்ந்து அவரை அந்த நாட்டிலிருந்து போலீசார் வெளியேற்றினார்

அவர் தங்கி இருந்த புன்தா டெல் எஸ்டே என்ற நகரிலிருந்து ரஜினீஷும் அவரது சீடர்களும் தனி விமானத்தில் புறப்பட்டனர்.

விமானம் பிரேசில் நாட்டுக்கு போனது அங்கு [illegible] என்ற நகரில் அந்த விமானம் இறங்கி [illegible] பிடித்துக் கொண்டது அங்கிருந்து ஜமைக்கா தீவுக்கு ரஜினீஷ் புறப்பட்டார்.

## சென்னை மாநகராட்சி
## ஒப்ப அறிவிப்பு
கட்டடத்துறை

மாநகராட்சி கட்டடத்துறையில் பதிவு செய்யப்பட்ட ஒப்பந்தகாரர்களிடமிருந்து கீழே குறிப்பிட்ட தேதிகளில் பிற்பகல் 2-00 மணி வரை ஆணையரது பெயரில் முன் பணத் தொகை செலுத்துச்சீட்டு வங்கி டிராப்ட்டு இணைக்கப்பட்ட முடி அரக்கு முத்திரையிடப்பட்ட ஒப்பங்கள் கட்டட பொறியாளரால் வரவேற்கப்படுகின்றது. ஒப்ப பாரங்கள் அறிவிக்கப்பட்ட தேதிகளிலிருந்து ஏழு (7) நாட்களுக்குப் பிறகு விற்பனைக்குக் கிடைக்கும்.

| வேலையின் பெயர் | மதிப்பீட்டுத் தொகை மற்றும் வகுப்பு | ஒப்ப வைப்புத் தொகை | ஒப்ப தேதி |
| --- | --- | --- | --- |
| 1. கதுந. சி3-987-86 ஒப்பம் - கோட்டம் 75, அண்ணா நகர் 'ஏ-எல்' பிளாக்கிலுள்ளவிளையாடுமிடத்திற்கு கேட் அமைத்து முள் கம்பி வேலி கட்டுதல் சம்பந்தமாக | ரூ. 78,600- 4ம் அதற்கு மேலும் | ரூ. 685- | 11-7-86 |
| ஒப்ப நமூனா வாங்குவதற்கு கடைசி தேதி: 9-7-86 ஒப்ப நமூனா விலை: 25- மறு ஒப்ப அறிவிப்பு | | | |
| 2. கதுந.எண் சி5 288 ஒப்பம் - சென்னை மாநகராட்சி கோட்டங்கள் முதல் 20 வரையுள்ள பொது கழிவிடங்கள் அபிவிருத்தி வேலைகள் செய்தலும் பழுதுகளில்சரிபார்த்தலும், நீர் விநியோகம் மற்றும் கழிவுநீர் வசதிகளிலுள்ள பழுதுகளை சரிபார்த்தல். | 3,75,000/ 2ம் அதற்கு மேலும் | 3750/- | 18-7-86 |
| ஒப்ப நமூனா வாங்குவதற்கு கடைசி தேதி: 16-7-86 ஒப்ப நமூனா விலை 50 | | | |
| 3 கதுந. எண் சி4-956-86. ஒப்பம்- கோட்டம் எண். 134, கோவிந்தசாமி நகரில் இந்தியன் மார்க்-2 பம்ப் நிறுவுதல்சம்பந்தமாக. | 14,100- 5ம் அதற்கு மேலும் | 125- | 4-7-86 |
| ஒப்ப நமூனா வாங்குவதற்கு கடைசி தேதி: 2-7-86 ஒப்ப நமூனா விலை. 10- | | | |

தி. அ, ஞானம்
கட்டடப் பொறியாளர்

## TNPSC Advt. No 24

தமிழ்நாடு தொழில் சார்நிலைப் பணியில் புவியியல் மற்றும் சுரங்கத் துறையில் (Geology and Mining Department) துளையிடும் உதவியாளர் (Drilling Assistant) பதவியில் ஒரு காலியிடத்திற்கு நேரடித் தேர்வின் மூலம் நியமிக்கப்பட விண்ணப்பங்கள் வரவேற்கப்படுகின்றன.

(நியமன ஒதுக்கீட்டு விதி இத்தேர்விற்கு பொருந்தாது)

சம்பளம்: மாதம் ஒன்றுக்கு ரூபாய் 1045-45-1450/65-1775

வயது: 30க்கு குறைவாக.

தகுதி: 1. (a) A degree or diploma in Mechanical Engineering or a degree in Science in Geology or a degree or diploma in Mining Engineering.

OR

(b) A diploma in Mechanical or Mining Engineering of the StateBoard of Technical Education and Training, Tamil Nadu or of any recognised Institution or Board;

AND

2 Practical experience for a period of not less than one year in Diamond Drilling in different formation with various types of drilling machine with different core diametres

If persons with the experience referred to above are a not available, the persons without practical experience prescribed above will be eligible for appointment to the post.

முடிவுத் தேதி: 2-7-1986 அன்று மாலை 5-30 மணி
வயது வரம்பு: 1-7-1986 அன்றுள்ளபடி

ஆ. தி. வ. / ப. வ. பி. வ. தாயகம் திரும்பியவர்கள் முன்னாள் இராணுவத்தினர், மற்றும் நாற்பது வயதிற்கு குறைவாக உள்ள பணியிலிருந்து விடுவிக்கப்பட்ட மற்றும் பணியிலிருக்கின்ற தற்காலிக மாநில அரசு ஊழியர்கள், போன்றவர்களுக்கு வயது மற்றும்/அல்லது தகுதியிலிருந்து அளிக்கப்படும் சலுகைகள் மற்றும் அல்லது விண்ணப்பக் கட்டணச் சலுகைகள் தேர்வாணயத்தின் "பணி வேட்பாளர்களுக்கான விதிமுறைகளில்" தரப்பட்டுள்ளன

விண்ணப்பப் படிவமும், நியமனத்தைப் பற்றிய முழு விவரங்களும் செயலாளர். தமிழ்நாடு அரசுப் பணியாளர் தேர்வாணையம், சென்னை-600 002 அவர்களுக்கு எழுத்து மூலம் கோரிப் பெற்றுக்கொள்ளலாம் கோரிக்கைகள் தமிழிலோ அல்லது ஆங்கிலத்திலோ பதவியின் பெயர் மற்றும் விளம்பர எண் ஆகியவற்றைக் குறிப்பிட்டு எழுதப்பட்டு செயலாளர் தமிழ்நாடு அரசுப்பணியாளர் தேர்வாணையம் சென்னை அவர்களுக்கு வழங்கக்கூடிய 1-6-1986க்கு அன்றோ அதற்கு பிறகோ வாங்கப்பட்ட இரண்டு ரூபாய்க்கானகோடிட்ட அஞ்சல் ஆணையுடனும் சுயவிலாசம் எழுதிய உறையுடனும் (26X12செ.மீ.) அனுப்பவேண்டும் கோரிக்கைகள் பிறமொழியில் இருக்குமாயின் அத்துடன் ஆங்கில மொழி பெயர்ப்பும் இணைக்கப்பட்டிருக்கவேண்டும். மேற்கூறியவற்றை நிறைவு செய்யாத கோரிக்கைகள் கவனிக்கப்பட மாட்டா

சுருக்கங்கள்

ஆ.தி.வ — ஆதிதிராவிடர் வகுப்பினர்
ப.வ — பழங்குடி வகுப்பினர்
பி.வ — பிற்பட்ட வகுப்பினர்

IPR-24090-86-ET

Edited and Published by K RAVINDRAN on behalf of Thangamani Publications and Printed by All India Anna D M K Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road MADRAS-29.

## சப்தர்ஜங் மருத்துவமனை

புதுடில்லி

ஜெனரல் நர்ஸிங் மற்றும் மிட்வைப் (செவிலித்தாய்) கோர்ஸுகளில் சேருவதற்கான விண்ணப்பங்கள் குறிப்பிடப்பட்ட பாரங்களில் திருமணமாகாத/விதவை/விவாகரத்து பெற்ற இந்திய பிரஜா உரிமை பெற்ற பெண்களிடமிருந்து வரவேற்கப்படுகின்றது.

தாழ்த்தப்பட்ட மற்றும் பழங்குடி இனத்தவருக்கு ரிசர்வ் செய்யப்பட்டுள்ளது 22½ சதவிகிதம் தாழ்த்தப்பட்டவருக்கு 15% பழங்குடியினருக்கு 7½% விகிதமும்) ரிசர்வ் செய்யப்பட்டுள்ளது இவற்றிற்கு பொருத்தமான விண்ணப்பதாரர்கள் கிடைக்கப் பெறாவிடில், இந்த ஸ்தானங்கள் இதர விண்ணப்பதாரர்களை கொண்டு நிரப்பப்படும்.

உபகாரச் சம்பளம்: (Stifund) முதல் ஆண்டில் மாதம் ஒன்றுக்கு ரூ 250ம், இரண்டாவது ஆண்டு மூன்றாவது மாதம் ஒன்றுக்கு ரூ 300ம் உபகாரச் சம்பளம் வழங்கப்படும். அனைவருக்கும் இலவச தனி நபர் இடவசதி அளிக்கப்படும். நர்ஸுகள் ஹாஸ்டலில் வசிக்கவேண்டியது கட்டாயமாகும்: விண்ணப்பதாரர்கள், உணவு, யூனிபாரம், சலவை செலவு போன்றவற்றிற்கு தங்கள் சொந்த செலவிலேயே செய்து கொள்ள வேண்டும்.

ஜெனரல் நர்ஸிங் (1) மொத்த சீட்டுகள் 15முதல் 20வரை. (2) கோர்ஸின் காலம்- 3வருடங்கள் (3) கல்வி யோக்யதாம்சங்கள்- 10+2 (12வது வகுப்பு தேறியவராகஇருக்கவேண்டும்)

அல்லது அதற்கு சமமான தேர்வில் 50% மார்க்குகள் பெற்று வெற்றி பெற்றிருக்க வேண்டும். (SC & ST க்கு 45%) (4) வயது 1986 அக்டோபர் 1-ம் தேதியன்று 17 வயதுக்கு அதிகமாகவும் 25 வயதுக்கு குறைந்தவராகவும் இருக்கவேண்டும் விண்ணப்பதாரர்கள் எழுத்து மூலமான தேர்வு ஒன்றிற்கு ஆஜராக வேண்டும் வெற்றி பெற்ற விண்ணப்பதாரர்கள் இறுதி தேர்வுக்காக நேர்முக தேர்வில் கலந்து கொள்ள வேண்டும்.

மிட்வைப் (செவிலித்தாய்) (1) இடங்கள் 3 முதல் 5 (2) கோர்ஸின் காலம் 6 மாதங்கள் (3) கல்வியோக்யதாம்சம்: பதிவு பெற்ற நர்ஸாக இருக்க (P.N.R.யில பதிவு செய்திருத்தல் அவசியம்) வேண்டும் (4) வயது 1986 அக்டோபர் 1ம் தேதியன்று 30 வருடங்களுக்கு மேற்படாமல் இருக்கவேண்டும்

ஜெனரல் நர்ஸிங்கிற்கான விண்ணப்ப பாரங்கள் பெறும் விதம்: விண்ணப்ப பாரங்கள், அலுவலக நாட்களில் மட்டும் காலை 10 மணி முதல் பிற்பகல் 12.30 மணிவரை தபால் மூலம் அல்லது நேரில் 1986 ஜூலை 1-ம் தேதி முதல் 19ம் தேதி வரை நர்ஸிங் சூப்பரின் டெண்டென்ட் அலுவலகத்திலிருந்து பெற்றுக் கொள்ளலாம். (சனிக்கிழமை நீங்கலாக) விண்ணப்ப பாரங்களை பெற, விண்ணப்பதாரர்கள் தகுதி பற்றி முடிவு செய்து கொள்ள தங்களின் மதிப்பெண் ஷீட்டுகளை அனுப்பி வைக்கவேண்டும். அத்தாட்சி பெற்ற நற்சான்றிதழ் நகல்களுடன் மதிப்பெண் பட்டியலுடன் பூர்த்தி செய்யப்பட்ட விண்ணப்ப பாரங்கள் நர்ஸிங் சூப்பரின்டெண்டெண்ட் அலுவலகத்திற்கு 1986, ஆகஸ்ட் 14-ம் தேதிக்கு முன்னதாக வந்துசேரும்படி அனுப்பி வைக்க வேண்டும் செவிலித்தாய் (Midwifery) பயிற்சி பெறுவதற்கான விண்ணப்பங்கள் பெறும் விதம் விண்ணப்பதாரர்கள் ஒரு வெள்ளைத்தாளில் தங்கள் யோக்யதாம்சம் மற்றும் ஜெனரல் நர்ஸிங் டிப்ளமோவுடன் அத்தாட்சி பெற்றநகல், P.N.R.C யிலிருந்துபெற்றபதிவுச்சான்றிதழ் கவுன்ஸிலிலிருந்து பெற்ற N.O.C. சர்டிபிகேட் மற்றும் ஜெனரல் நர்ஸிங் தேர்வு பெற்ற பள்ளியிலிருந்து நற்சான்றிதழ் ஆகியவற்றை இணைத்து அனுப்ப வேண்டும். விண்ணப்ப பாரங்களை நர்ஸிங் சூப்பரின்டெண்டெண்ட் அலுவலகத்திலிருந்து 1986 ஜூலை 1ம்தேதி முதல் 19ம் தேதி வரை எல்லா அலுவலக நாட்களிலும் காலை 10 மணி முதல் 1 மணி வரை சனிக்கிழமை நீங்கலாக தபால் மூலமோ அல்லது நேரிலோ பெறறுக் கொள்ளலாம். பூர்த்தி செய்யப்பட்ட விண்ணப்ப பாரங்கள் புதுடில்லி, சப்தர்ஜங் ஹாஸ்பிடல் நர்ஸிங் சூப்பரின்டெண்டெண்ட் அவர்களுக்கு 14-8-86 தேதிக்கு முன்னதாக கிடைக்கும்படி அனுப்பிவைக்கப்பட வேண்டும்.

குறிப்பு: மேற்கண்ட நற்சான்றிதழ் இல்லாமல் வரும் வேண்டுகோளுக்கு பாரங்கள் அளிக்கப்பட மாட்டாது இந்த கோர்ஸுகள் 1986 அக்டோபர் 1ம் தேதி முதல் துவங்கப்படும்

davp 553 (10)86

# இலங்கை ராணுவத்தில் அமெரிக்க - இஸ்ரேல் பாகிஸ்தான் உளவாளிகள்

புதுடெல்லி ஜூன் 21... இலங்கை இனப் படுகொலைகளில் அதன் படையினருக்கு அந்நியக் கூலிப்படையினர் உதவியும் பயிற்சியும் அளித்து வருகிறார்கள் என்பதையும் அந்நியக் கூலிப்படையினரின் முக்கிய புள்ளிகளின் பெயர்களையும் இலங்கை நாடாளுமன்றத்திலேயே ஆதாரத்துடன் அம்பலப்படுத்தி கம்யூனிஸ்ட் எம்.பி. சரத்முத்தெட்டுவேகமா கடும் கண்டனம் தெரிவித்தார்,

சென்ற மாதம் சரத்முத்தெட்டுவேகமா கார் விபத்தொன்றில் காயமுற்று மரணமடைந்தார் என்று செய்தி வந்தது.

இலங்கையில் அந்நிய கூலி படைகளின் எண்ணிக்கை யும் நடவடிக்கைகளும் மிகுந்து வருவது சரத்முத்தெட்டுவேகமா மரணம் பற்றிச் சந்தேகங்களைக் கிளப்புகிறது.

இந்த விபத்து சதிகளை அம்பலப்படுத்திய கம்யூனிஸ்ட் எம்.பி.யைத் திட்டமிட்டுக் கொலை செய்த சதியா என்று சி.என்.எஸ். செய்தி நிறுவனப் பொறுப்பாளர் வினா தொடுத்துள்ளார்.

### இனப் படுகொலை

இலங்கையில் கூலிப் படைகளாகவும் மற்றவகைகளிலும் செயல்படும் அந்நியர் எண்ணிக்கை வளர்ந்து வருகிறது. இஸ்ரேல், தென்னாப்பிரிக்கா, பிரிட்டன், அமெரிக்கா மற்றும் பாகிஸ்தான் ஆகிய நாடுகளிலிருந்து இப்போது வரும் இலங்கை பந்தோபஸ்து படையினரின் தமிழ் இனப்படுகொலை நடவடிக்கைகளுக்கு உதவி புரிந்து வருகிறார்கள் இத்தகைய அந்நியர் 100 முதல் 200 பேர் வரையிலும் அங்கிருக்கிறார்கள்

இஸ்ரேல் உளவுத் துறையைச் சேர்ந்த தனிப் பிரிவான ஷின்பேத் என்னும் ஓர் அமைப்பைச் சேர்ந்தவர்கள் இலங்கை பந்தோபஸ்து படையினருக்கு குறைந்தபட்சம் ஐந்து மையங்களிலாவது பயிற்சி அளித்து வருகிறார்கள்.

அனுராதபுரம், கிளிநொச்சி, வவுனியா, கியதலவா மற்றும் கொழும்பு வின் புறநகர் பகுதியான பனகோடா ஆகிய இடங்களில் இந்தப்பயிற்சிமையங்கள் உள்ளன. ஷின்பேத அமைப்பைச் சேர்ந்த நாற்பது ஐம்பதுபேர் இலங்கை பந்தோபஸ்துப் படையினருக்கும் பயிற்சிகள் அளித்து வருகிறார்கள்.

### குடியமர்த்த...

பல்வேறு அமைச்சகங்களுடனும் தொடர்புகொண்டிருக்கும் வேறுசிலரும் உண்டு இஸ்ரேலில் மேற்குக்கரையில் இஸ்ரேலியர்களைக் குடியமர்த்தும் நடவடிக்கையைச் செய்து முடித்தது எப்படி என்பதை இலங்கை அதிகாரிகளுக்கு போதிக்கும் இஸ்ரேலியர்கள் இலங்கையின் மஹாவேலி வளர்ச்சித்திட்ட வாரியத்துடன் தொடர்பு கொண்டு செயல்பட்டுவருகிறார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

மஹாவேலி திட்டத்தில் இப்போது பல திருத்தங்கள் குடியமர்த்தும் ஏற்பாடுகளிலும் பல மாற்றங்

மொசாத் படையினரும் சியில் தரையிறங்குகின்றன. அங்கு பெட்ரோல் நிரப்பிக்கொள்கின்றன. கொழும்பு கடுநாயகா விமான நிலையத்துக்குக் கிளம்புகின்றன. இலங்கை ஆயுதப்படைகளைச் சேர்ந்த 10 ஆயிரம் பேருக்கும் பயிற்சி அளிப்பதற்கு பாகிஸ்தான் ஒப்புக்கொண்டுள்ளது.

கடல் மார்க்கமாகவும் இலங்கைக்கு ஆயுதங்கள் கிடைத்து வருகின்றன. ஜூன் 10ந் தேதியன்று இலங்கையின் காலி நகர் துறைமுகத்தில் இரண்டு கப்பல்கள் வந்து தங்கின. இந்தக் கப்பல்களில் கவச மோட்டார்களும், வெடி மருந்துகளும் இருந்தன என்பது செய்தி. இந்தக் கப்பலைச் சுற்றிலும் இலங்கை படைகள் 300 பேர் இரவும் பகலும் காவல் புரிகின்றனர்.

### கூலிப் படைகள்

இத்தாலியில் விமானங்கள் தயாரிக்கும் ஸியாமார்செட்டி என்னும் நிறுவனத்துடனும், இலங்கை ஓர் ஒப்பந்தம் செய்திருக்கிறது. அந்த நிறுவனத்தின் விமானங்கள் சில, ஏற்கெனவே துருப்புகள் போக்குவரத்து பணியில் ஈடுபட்டுள்ளன. இந்த விமானங்களை ஓட்டுவது எப்படி என்று பயிற்சியும் நடைபெறுகிறது.

அமெரிக்காவின் பெல்மற்றும் ஹீயிகோப்ரா ஆகிய ஹெலிகாப்டர் போர் விமானங்களைமுக்கியமாக அமெரிக்க, பிரிட்டிஷ்கூலிப் படையினர் தான் இயக்குகிறார்கள்.

இஸ்ரேல் உளவுத் துறையைச் சேர்ந்த மொசாத் பிரத்யேகமான அதிரடிப்படையினர் ஆவர். இவ்வாறு 50-60 இஸ்ரேலியர்கள் இலங்கையில் உள்ளனர்.

பிரிட்டிஷ் கூலிப் படையினரும் உள்ளனர் இவர்கள் 100 பேராவது இருப்பார்கள் என்பது மதிப்பீடு

இந்தக் கூலிப் படையினரின் நாசகரமான நடவடிக்கைகளை அம்பலப்படுத்துவதுடன் அவற்றை சேர்ந்தவர்களாக இலங்கையில் செயல்பட்ட ஐந்து பேருடைய பெயர்களையும் இலங்கை நாடாளுமன்ற கம்யூனிஸ்ட்உறுப்பினரான சரத்முத்தெட்டுவேகம வெளியிட்டார் என்பது நினைவு கூறத்தக்கது.

மைக்போலஸ், டேவிட் பட்லர், டிக் பாக்ஸ்டன், ஸான்டிரஸ்ஸல், மற்றும் டீல் மெக்வித் என்பவர்கள் சரத் வெளியிட்டிருந்த ஐந்து பெயர்கள். மைக்போலஜூம், டீல் மெக்வித்தும் இஸ்ரேலில் கையாட்களாகலெபனானில்செயல்பட்டவர்கள். மெக்வித் சி ஐ ஏ யுடன்நெருக்கமான தொடர்புடையவரும் சி ஐ ஏ.வுக்காக அங்கோலாவில் செயல்பட்டவரும் ஆவார்.

### இத்தாலிய விமானம்

கூலிப்படையினர் வேறு சிலருடைய பெயர்களும் தமக்குத் தெரியும் என்று சரத் இலங்கை நாடாளுமன்றத்திலேயே அறிவித்திருந்தார்

இங்கிலாந்தில் தலைமையகம் கொண்டு இயங்கி வரும் சீனிமினி அமைப்பு பற்றியும் அந்த அமைப்புடன் இலங்கை அரசு ஒப்பந்தம் ஒன்றைச்செய்து கொண்டிருப்பது பற்றியும் கூட சரத் அறிவித்தார் பிரிட்டிஷ் அயலுறவு அலுவலகத் தகவல்களின்படி இந்த ஒப்பந்தம் பல வருடங்களாக வர்த்தக அடிப்படையில் அமுல்படுத்தப்பட்டு வருகிறது

பிரிட்டன் நாடாளுமன்றத்தில் இந்தப் பிரச்சினை வந்தபோது பிரிட்டனின் அயல்துறை மற்றும்காமன்வெல்த் துணை அமைச்சர் டிமாக்கா இது உண்மையே என்று நாடாளுமன்றத்திலேயே ஊர்ஜிதம் செய்தார்.

பிரிட்டிஷ் கூலிப்படையின அமெரிக்க கூலிப்படையினருடன் கூடச் சேர்ந்து ஹெலிகாப்டர் போர் விமான நடவடிக்கை

ல் ஈடுபட்டுள்ளனர். இலங்கை விமானிகளுக்கும் விமானபராமரிப்பு ஊழியர்களுக்கும் இவர்கள் பயிற்சியும் அளித்து வருகிறார்கள். ஜூன் முதல் வாரத்தில் மட்டும் இந்தச் சீனிமினிப் படையினர் யாழ்ப்பாணத்து வானில் 64 தடவை வட்டமிட்டிருக்கின்றனர் என்று விஷயமறிந்த வட்டாரங்களின் தகவல் தெரிவிக்கின்றன.

இலங்கை நாடாளுமன்ற கம்யூனிஸ்ட் உறுப்பினர் சரத் முத்தெட்டுவேகம சந்தேகம் உண்டுபண்ணும் சூழ்நிலையில் கார் விபத்து ஒன்றில் மரணம் அடைந்தார்.

### பாகிஸ்தானியர்

ஜீப்மாதிரியானவாகனம் ஒன்று தலைதெறிக்கும் வேகத்தில் வந்து அவருடைய காருடன் மோதியது. இந்தவிபத்தில் தன்னுடைய காரிலிருந்து தூக்கி யெறியப்பட்ட சரத்படுகாயமடைந்து மரணமடைந்தார். இது விபத்து அல்ல கூலிப்படையினரின் திட்டமிட்ட சதியே என்றுசந்தேகிக்கப்படுகிறது. சதிகளை அம்பலப்படுத்தி வந்த சரத்தை வாய்மூடச்செய்து விடுவதே அவர்களுடைய விருப்பம்.

தென்அமெரிக்கக் கூலிப் படைகள் ஐந்து அல்லது ஆறு இருப்பதாக மதிப்பிடப்பட்டிருக்கிறது.

ஏராளமான பாகிஸ்தானியர்களும் இருக்கிறார்கள் தோற்றத்தில் வித்தியாசம் அதிகம் இல்லாததனால் பார்வைக்கு இந்த பாகிஸ்தானியர் சிங்களர்களாகவே தெரிகிறார்கள். எவ்வாறாயினும் பாகிஸ்தானுக்கும் இலங்கைக்கும் இடையே உள்ள தொடர்பு அதிகார பூர்வமானது. பங்களாதேஷ் போரின் போது இலங்கை வானில் பாகிஸ்தான் விமானங்கள் பறப்பதற்கு வசதிகள் அளிக்கப்பட்டன இலங்கைக்கு அந்த நன்றிக் கடனை பாகிஸ்தான் இப்போது செலுத்துகிறது.

## திருக்குறள் தசாவதானிக்கு அமைச்சர் ஆனூர் ஜெகதீசன் அஞ்சலி

செங்கற்பட்டு, ஜூன் 21- அரசுக்கலைஞர் திருக்குறள் தசாவதானி இராமையா அண்மையில் மறைந்தது தெரிந்ததே. இவருக்கான அஞ்சலிக் கூட்டம் செங்கற்பட்டில் நடந்தது

'இலக்கியவீதி' ஏற்பாடு செய்திருந்த இந்த நிகழ்ச்சிக்கு தமிழ வளர்ச்சித் துறை இயக்குனர் சிலம்பொலி செல்லப்பன் தலைமை தாங்கினார். அமைப்பாளர் இனியவன் அனைவரையும் வரவேற்றுப் பேசினார்.

ஊரகத் தொழில்துறை அமைச்சர் ஆனூர் ஜெகதீசன், தசாவதானி இராமையாவின் உருவப்படத்தைத் திறந்து வைத்தார். அவர் தமது உரையில் "நினைவுக்கலை ஏந்தல் இராமையாவின் இழப்பு ஈடு செய்ய முடியாதது அருங்கலைகள் எல்லாம் அழிந்துவரும் அபாயம் உணர்ந்து நாம் விழிப்புடன் செயல்பட வேண்டும்" என்று குறிப்பிட்டார்.

சிலம்பொலி செல்லப்பன். தாமரைமணாளன், வெ. நல்லதம்பி, கல்யாண, கவிஞர் தாராபாரதி ஆகியோர் தசாவதானி இராமையாவின் அருங்குணங்களை போற்றினர். கவிஞர் பல்லவன் நன்றி கூறினார்.

## சிறுமியிடம் வம்பு செய்த வாலிபர் சாவு

சென்னை. ஜூன் 21— சென்னை சிந்தாதிரிப்பேட்டையைச் சேர்ந்தவர் மணி, இவரது மகள் சீதா (வயது-11). இரவு வெளியே அனைவரும் படுத்து தூங்கிக் கொண்டிருந்தனராம்

அப்போது சிந்தாதிரிப்பேட்டை காக்ஸ் காலனி ரவி (வயது18) சீதாவிடம் முறைகேடாக நடக்க முயன்றாராம்.

இதையடுத்துசீதாகூச்சலிடவே. ரவி தப்பி ஓட முயன்று கூவத்தில்விழுந்து விட்டாராம்.

ரவி கூவம் ஆற்றில் மூழ்கி இறந்திருக்கக்கூடும் எனக் கருதப்படுகிறது

போலீசாரும். தீயணைப்புத் துறையினரும் ரவியின் உடலைத் தேடி வருகின்றனர்.

# இலங்கை அரசு பணிந்துவருகிறது டெல்லி கருத்து

புதுடெல்லி ஜூன் 21— இலங்கை அரசு கொடுத்துள்ள விளக்கங்கள் ஓரளவு திருப்தி அளிப்பதாக இந்தியா கருதுகிறது.

ஈழப் பிரச்சினை தீர மத்திய அமைச்சர் ப, சிதம்பரம் தலைமையில் இந்தியக் குழு சென்று கொழும்பில் பேச்சுவார்த்தை நடத்தியது

ஈழத் தமிழர் பிரச்சினை தீர இலங்கை அரசு சில புதிய திட்டங்களைக் கூறியிருந்தது அந்த திட்டங்களை மத்திய அரசு பரிசீலித்தது. சில விளக்கங்களை இலங்கை அரசிடம் மத்திய அரசு கேட்டிருந்தது அதன்படி இலங்கையும் விளக்கங்களை இந்தியாவுக்கு கொடுத்தது

முன்பு போலல்லாமல் இலங்கை அரசு கொடுத்துள்ள விளக்கங்கள் ஓரளவு திருப்தி தருவதாக இருப்பதாகவும், முன்பிருந்தநிலையிலிருந்து இலங்கை இறங்கி வந்திருப்பதாகவும் இந்தியா கருதுகிறது.

இலங்கை தூதர் திலகரத்னே இந்தவிளக்கங்களை இந்தியாவிடம் கொண்டு வந்துகொடுத்தார்.

தமிழர்கள் அதிகம் வாழும் பகுதியை தனிமாநிலம் ஆக்குவது அதிக ஓட்டு பெறும் கட்சி ஆட்சிப் பொறுப்புக்கு வருவது என்ற இலங்கையின் திட்டத்தில் எந்த பிரச்சினையும் இல்லை.

ஆனால் மாநிலத்தில் சட்டம் ஒழுங்கை பராமரிப்பதில் யாருக்கு அதிகாரம்? மத்திய அரசுக்கா? மாநில அரசுக்கா என்ற விவகாரம் முழு அளவில் வரையறுக்கப்படவில்லை அதுபற்றி இலங்கையிடம் இந்தியா மேலும் விளக்கம் கேட்க இருக்கிறது.

இலங்கை தமிழர் பிரச்சினை குறித்து ஆலோசிக்க அனைத்துக் கட்சி கூட்டத்தை ஜெயவர்த்தனே கூட்டியுள்ளார் இதில் ஈழத்தமிழர் விடுதலைஇயக்கங்களைச் சேர்ந்தவர்கள் கலந்து கொள்வார்களா என்பது தெரியவில்லை

இலங்கையில் மன்னார் மாவட்டத்தில் பெரிய காடு என்ற இடத்தில் ராணுவ முகாமில் இருந்த சிங்கள ராணுவத்தினர் வேன்களில் தமிழர்கள் வாழும் பகுதிகளில் தாக்குதல் நடத்த திட்டமிட்டனர் விடுதலைப்புலிகள் அவர்களை எதிர்த்து கடும் யுத்தம் நடத்தினர். ராணுவ லாரி ஒன்று கண்ணி வெடியில் சிக்கி சுக்கல் சுக்கலாக நொறுங்கியது இதில் 20 சிங்கள சிப்பாய்கள் இறந்தனர்.

முல்லைத்தீவு பகுதியில் ராணுவ தாக்குதலில் தமிழப் பெண் ஒருவரும் 8 விடுதலை புலிகளும இறந்தனர்

தலைமன்னார் அருகே நடந்தயுத்தத்தில் 2 சிங்கள சிப்பாய்கள் கொல்லப்பட்டனர்.

### அவசர நிலை நீடிப்பு

இலங்கையில் தற்போது அமலில் உள்ள அவசர நிலை மேலும் நீடிக்கப்பட்டுள்ளது. இதற்கான சட்டம் இலங்கை நாடாளுமன்றத்தில் நிறைவேறியது.

### பாதிரியார் கொலை

யாழ்ப்பாணம் அருகே வாசவில்லான் என்ற இடத்தில் கத்தோலிக்க கிறிஸ்தவ பாதிரியார் ஒருவரை சிங்களராணுவம் மிகக் கோரமான முறையில் கொலை செய்தது 64வயதான அந்த பாதிரியார் பெயர் வின்சென்ட். கிறிஸ்தவ கோவிலில் வைத்து ராணுவத்தினர் அவரை சுட்டுக்கொன்றனர்.

கிளிநொச்சி பகுதியில் விடுதலைப் புலிகளுக்கும், சிங்கள ராணுவத்திற்கும் தொடர்ந்து யுத்தம் நடந்து வருகிறது,

# தமிழகத்துக்கு 70 ஆயிரம் டன் அரிசி : மத்திய அரசு ஒதுக்கீடு செய்தது

### அமைச்சர் திருநாவுக்கரசு தகவல்

கோவை, ஜூன் 21— தமிழகத்திற்கு இந்த மாதம் மைய அரசு 70 ஆயிரம் டன்அரிசி ஒதுக்கீடு செய்திருக்கிறது.

இந்தத் தகவலை தமிழக உணவு அமைச்சர் திருநாவுக்கரசு தெரிவித்தார்.

தமிழகஅரசின் நுகர் பொருள் வாணிபக்கழகத்தின் வட்டார அலுவலகத்தை கோவையை அடுத்த கவுண்டம்பாளையத்தில் அமைச்சர் திறந்து வைத்தார், இந்த விழாவில் பேசுகையிலேயே அவர் மேற்கண்டவாறுகூறினார்.

மலிவுவிலையில் ஏழை-எளிய மக்களுக்கும் நடுத்தர மக்களுக்கும் அரிசி வழங்க மாதம் ஒரு லட்சம் டன் அரிசி தேவைப்படுகிறது ஆனால், மைய அரசு தமது இருப்பிலிருந்து ஜனவரி முதல் மார்ச் மாதம் வரை 40 ஆயிரம் டன் அரிசி வீதம் தான் வழங்கியது.

மாதம் ஒரு லட்சம் டன் அரிசி வழங்குவது தேவை என்பதை மைய அரசுக்கு எடுத்துக் கூறினோம். அதன் பயனாக இந்த மாதம் மைய அரசு தமது தொகுப்பிலிருந்து 70 ஆயிரம் டன் அரிசி ஒதுக்கியிருக்கிறது என்று அமைச்சர் திருநாவுக்கரசு கூறினார்

### நவீன ஆலைகள்

தமிழக அரசின் நுகர்பொருள் வாணிபக் கழகம் புதிதாக 9 நவீன அரிசி ஆலைகளைத் துவக்க இருக்கிறது. இதில் இரண்டு ஆலைகள் தஞ்சை மாவட்டத்திலும் வடஆற்காடு, தென்னாற்காடு புதுக்கோட்டை, பசும்பொன் முத்துராமலிங்கம், ராமநாதபுரம் மாவட்டங்களில்ஒவ்வொரு ஆலையும் திறக்க இருக்கிறது என்றும் அவர் கூறினார்.

தமிழகத்திலிருந்து அண்டை மாநிலங்களுக்கு அரிசி கடத்தப்படுவதைத் தடுக்க உறுதியான நடவடிக்கைகள் எடுக்கப்படும் என்றும் அமைச்சர் திருநாவுக்கரசு கூறினார்.

மலிவு விலைக் கடைகள் மூலம் போதிய அளவுக்கு புழுங்கல் அரிசி வழங்கவும் ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது என்றும் அவர் கூறினார்.

## வீட்டுவசதி வாரிய வீடு: குலுக்கலில் ஒதுக்கீடு

சென்னை, ஜூன் 21— தமிழ்நாடு வீட்டு வசதி வாரியத்தால், திருவான்மியூர் விரிவாக்கத் திட்டப் பகுதியில் கட்டப்பட்டுள்ள வீடுகள் குலுக்கல் முறையில் வழங்கும் விழா நடைபெற்றது

சென்னை பெசன்ட் நகரில் உள்ள வீட்டுவசதி வாரிய சமூக நலக்கூடத்தில் நடைபெற்ற இந்த விழாவில் தமிழ்நாடுவீட்டு வசதி வாரியத் தலைவர் திருப்பூர் மணிமாறன் வாரிய துணைச்செயலாளர் பார்த்தசாரதி. உதவிச் செயலாளர்கள் எஸ்.டி பாஷா தட்சிணாமூர்த்தி, தலைமைப் பொறியாளர் செல்வராஜ் நிர்வாக பொறியாளர் சங்கர்ராவ் மற்றும் வாரிய அலுவலர்கள் பொதுமக்கள் பலரும் பங்கேற்றனர்

சுமார் 38 வீடுகள் உள்ள இந்த விரிவாக்கத்திட்டத்தில் வீடுகள் கோரி சுமார் 12 000 மனுக்கள் வந்தது இவைகளைப் பரிசீலித்து தேர்ந்தெடுக்கப்பட்ட மனுக்களின் எண்களையும் வீடுகளின் எண்களையும் போட்டு குலுக்கல் முறையில் வீடுகளைத் தேர்ந்து எடுத்து வழங்கினார்கள்.

## ரூ 3 கோடிக்கு சந்தனக்கட்டை ஏலம்

சேலம், ஜூன் 21— சேலம் அஸ்தம்பட்டியில் உள்ள வனத் துறை அலுவலகத்தில் சந்தனக்கட்டை ஏலம் விடப்பட்டது.

417.2 டன் சந்தனக் கட்டை ஏலம் விட்டதில் 2 கோடியே 90 லட்சம் ரூபாய் கிடைத்தது.